# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 | 1-10-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 10, 11


## ரசிகர்களே !
## கலைஞர்களே !
## கலை மன்றங்களே !

வணக்கம். உங்கள் ஒத்துழைப்புடன் 'இயலிசை' மெல்ல ஆனால் ஆழமான வேர்களுடன் வளர்ந்து வருகின்றது. சில கலைஞர்கள் ஆதரவு அளித்துள்ளனர். பயன்படுத்திக் கொண்டுள்ளனர். பலர் இயலிசை பற்றி விபரம் அறியாமல் இருக்கலாம். அறிந்தால் அவசியம் ஆதரவு தருவர் என்ற நம்பிக்கை எங்களுக்குண்டு.

கலைஞர்களே ! நீங்கள் செய்யும் சாதனைகள் கிடைக்கும் விருதுகள், வெளிநாடு பயணம், இல்ல விழாக்கள், விலாச மாற்றம் இவற்றை தெரிவியுங்கள் பிரசுரம் செய்கின்றோம். எத்தனையோ இடங்களிலிருந்து இசை ஏற்பாடு செய்து தர கடிதங்கள் வந்தன. ஏற்பாடு செய்து தந்துள்ளோம். வெளிநாடுகளிலும் இருந்து கடிதங்கள் வந்துள்ளன. உரிய ஏற்பாடுகள் செய்கின்றோம். இது உங்கள் பத்திரிகை சந்தா அனுப்பாதவர்கள் உடன் அனுப்பி இதனை வளர்க்க வேண்டுகின்றோம்.

### கலை மன்றங்களே ! திருக்கோயில் நிர்வாகிகளே !!

உங்களில் சிலர் எங்களுக்கு கலை நிகழ்ச்சிகள் விபரம் அனுப்பியுள்ளீர். வெளியிட்டுள்ளோம். ஏனோ பலர் இன்னும் அனுப்ப முன்வரவில்லை. உங்கள் அழைப்பாளர் பட்டியலில் எங்களையும் சேர்த்து வையுங்கள். எத்தனையோ அழைப்பிதழ்கள் தேவையுள்ள, தேவையற்ற இடங்களுக்கு அனுப்பலாம். விலாசம் சரி இல்லாமல் திரும்பி வரலாம். அதில் ஒன்றை எங்களுக்கு அனுப்புங்கள் முடிந்தவரை பிரசுரம் செய்கின்றோம்.

### கவிஞர்களே !

உங்கள் வாழ்த்து கவிதைகளுக்கு நன்றி. ஆனால் எங்களுக்கு தேவை தமிழ் இசைப்பாடல்கள் உதாரணத்திற்கு ஒன்று சொல்கின்றோம். பாடகர்கள் பல ஊருக்கு கச்சேரிக்கு செல்கின்றனர். ஆனால் அந்த ஊர் மீது பாடல்கள் இராது. நீங்கள் உங்கள் ஊர்வளம், தெய்வம் இவற்றின் மீது பாடல்கள் எழுதி அனுப்புங்கள். இயலிசையில் வெளிவந்தால் சகல இசைவாணர்களும் படிப்பார்கள். பயன்படுத்திக்கொள்ளலாம்.

### இசைவிழா சிறப்பிதழ் !

வரும் டிசம்பர் மாதம் சென்னையில் இசைவிழா பருவம் இதனையொட்டி டிசம்பர் இயலிசை இதழ் அதிக பக்கங்களுடன் வெளிவரும். இசைவிழா நிகழ்ச்சிகள் விபரம்; விருதுகள் பெறும் கலைஞர்கள் வாழ்க்கைக் குறிப்புகள். மேலும் பல இசையுலக விவரங்களுடன் வெளிவரும். இதில் 'ஆடலரசி அபிராமி' என்ற கலைத் தொடர்கதை ஒன்றும் துவங்கும்.

—ஆசிரியர்



## 1982 தமிழ் இசை விழா
## சீர்காழி கோவிந்தராசன் 'இசைப்பேரறிஞர்' பட்டம் பெறுகின்றார்

**மத்திய அமைச்சர் R. V. சுவாமிநாதன் விழாவினைத் துவக்குகின்றார்**

இவ்வாண்டு வரும் டிசம்பர் மாதம் 22ந் தேதி சென்னை இராஜா அண்ணாமலை மன்றத்தில் 40வது ஆண்டு தமிழிசை விழா தொடங்குகின்றது. மத்திய அமைச்சர் R. V. சுவாமிநாதன் விழாவினைத்து துவக்கி உரையாற்ற உள்ளனர். தமிழக அரசவைக் கலைஞர் இசைமணி சீர்காழி கோவிந்தராசன் விழாவிற்கு தலைமை வகித்து 'இசைப்பேரறிஞர்' விருது பெறுகின்றார். இவரைப் பற்றிய வாழ்க்கை இதர குறிப்புகள் பின்னர் விரிவாக வெளிவரும்.

இசைவிழா 12 நாட்கள் நடைபெறும். பண் ஆராய்ச்சி மாநாடு டிசம்பர் 23 காலை 9 மணிக்கு துவங்குகின்றது. புலவர் கீரன் துவக்கி வைக்கின்றார். வழக்கம்போல் பல இசைவாணர்கள் விழாவில் கலந்து கொள்கின்றனர்.

சென்னை இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி இசைவிழாவிற்கு இவ்வாண்டு வீணை S பாலச்சந்தர் தலைமை தாங்கி விருது பெறுவது அறிந்ததே மியூசிக் அகடமி இவ்வாண்டு விழா தலைவர் இன்னும் முடிவாகவில்லை.


## அருள்மிகு
## ராஜராஜேசுவரி நவசக்தி
**கன்னியம்மன் திருக்கோவில்,**
**சென்னை-30**

### நவராத்திரி விழா கலை நிகழ்ச்சிகள்

அக்டோபர் 82
18—10—82 திருப்பரங்குன்றம் K. T ஜெயலட்சுமி இன்னிசை
19—10—82 இசை நாடகம்-வள்ளி திருமணம்
20—10—82 மகாலட்சுமி நாட்டியாலயா மாணவிகள் நடனம்
21—10—82 இசை நாடகம்-சத்தியவான் சாவித்ரி
22—10—82 திருச்சி குருநாதன் குழுவினர் இன்னிசை
23—10—82 இசை நாடகம்-கற்புக்கரசி கண்ணகி
24—10—82 பட்டி மண்டபம்
25—10—82 செல்வி வத்சலா குழுவினர் இன்னிசை
26—10—82 நாடகம் S K ரங்கமணி குழுவினர்

### நவராத்திரி விழா நடத்துபவர்களுக்கு . . .

உங்கள் ரசனைக்கேற்றவாறு வசதிக்கேற்றவாறு நல்ல கலை நிகழ்ச்சிகள் 'இயலிசை' இதழ் மூலம் ஏற்பாடு செய்து கொள்ளலாம். விபரங்களுக்கு எழுதவும்.


## குமுதம் ஏட்டுக்கு பாராட்டு !

திருவனந்தபுரம்

அரசர் ஸ்வாதித்திருநாள் கீர்த்தனைகள் என்று சொல்லப்படும் பாடல்களை இயற்றியவர் அவரல்ல. அவரது சபையில் அரசவைக் கலைஞராக இருந்த தஞ்சாவூரைச் சேர்ந்த வடிவேலு என்ற இசைக்கலைஞர் இயற்றி அரச முத்திரையுடன் நாட்டில் பரவச் செய்தார். இந்த விபரம் சென்ற தலைமுறை வித்வான்கள் அனைவருக்கும் தெரிந்ததே. அவரது பரம்பரையில் வந்தவர்தான் இன்றைய தமிழக அரசவை வீணைக் கலைஞர் K.P. சிவானந்தம். இந்த தகவல் இன்றைய தலைமுறையும் அறியும் வண்ணம் 23-9-82 இதழில் அழகாக வெளியிட்டு அந்தக் கலை குடும்பத்திற்கு பெருமை சேர்த்த குமுதம் ஏட்டிற்கு இயலிசையின் பாராட்டுக்கள் !

அது மட்டுமல்ல, அந்தப் பாடலை செம்மங்குடி சீனுவாச அய்யர் தான் திருவனந்தபுரத்தில் பணியாற்றிய பொழுது பலருக்கும் பயிற்றுவித்து மேலும் பிரபலமடைய வைத்தவர்.

## பெரியசாமி தூரன் பாடல்கள்
## 'சங்கீதா' இசைச் சுட்டியாக வெளியீடு

சென்னை. இராஜா அண்ணாமலை புரத்தில் உள்ள மாஸ்டர் ரிகார்டிங் கம்பெனி, சங்கீதா' என்ற பெயரில் ஏராள இசைச் சுட்டிகள் (காஸட்) வெளியிட்டுள்ளனர். குறுகிய காலத்தில் 250 இசைச்சுட்டிகள் வெளியிட்டு சாதனை புரிந்துள்ளனர். இவர்கள் சமீபத்தில் மறைந்த பாடலாசிரியர் பெரியசாமி தூரன் பாடல்களைத் தொகுத்து பம்பாய் சகோதரிகளை பாடவைத்து இசைச்சுட்டி வெளியிட்டுள்ளனர். நல்ல வரவேற்பு கிடைத்துள்ளது.

தவிர பிரபல பாடகி S. ஜானகி பாடிய தியாகராஜ கீர்த்தனைகள், மீரா பஜன் இசைச்சுட்டிகளும், மலையாளத்தில் ஜெயசந்திரன் பாடிய புஷ்பாஞ்சலி இசைச்சுட்டியும் வெளியிட்டுள்ளனர், பரதநாட்டிய பாடல்களை டாக்டர் M.L வஸந்தகுமாரியை பாடவைத்து வெளியிட்டுள்ளனர்.

இயலிசை



1-10-82

## வளருங் கலைஞர்கள்



பழம்பெரும் வயலின் கலைஞர் திருவள்ளுவர் வீரராகவன் மகன் திருவள்ளுவர் V. பார்த்தசாரதி தனது இளமையிலிருந்த தந்தையிடமிருந்தும் தனது சிற்றப்பா பிரபல வயலின் மேதை திருவள்ளுவர் சுப்ரமணியம் இவர்களிடமிருந்தும் வயலின் வாசிக்க கற்றுக் கொண்டு கடந்த 15 ஆண்டுகளாக ஏராள கச்சேரிகளில் வாசித்து வருகின்றார். இவரது வாசிப்பு சகல இசைக்கலைஞர்களுக்கும் மிகவும் பிடிக்கும். இவர் நாதமும் இனிமை சுபாவமும் இனிமை, லாகுடியார் போன்ற சுத்தமான நாதம் ஆரம்பத்தில் இவர் பல இளம் வித்வான்களுக்கும்; G. N. தேசிகன், சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம், இவர்களுக்கு வாசித்து பின்னர் சென்னை வானொலியில் வாசிக்க ஆரம்பித்தது இசையரசு M. M. தண்டபாணி தேசிகன் சிதம்பரம் S. ஜெயராமன், இவர்களுக்கு வாசித்து பிரபலமானார். தமிழகத்தில் இவர் வாசிக்காத சபாவே கிடையாது மியூசிக் அகடமி, தமிழிசைசங்க இசை விழாக்கள் அனைத்திலும் பங்கு பெற்று வருகின்றார். இன்று மதுரை S. சோமசுந்தரம் உட்பட சகல முன்னணி பாடகர்களுக்கும் வாசித்து வருகின்றார். வானொலியில் கடந்த 10 வருடமாக தனிக்கச்சேரியும் செய்து சமீபத்தில் தென்மண்டல அரங்கிசையும் வழங்கினார். T. V.யிலும் வாய்ப்பு வழங்கினார்கள். இவருக்கு நிகழ்காலம், எதிர்காலம் இரண்டுமே சிறப்பாக இருக்கின்றது.

## தமிழிசைச் சங்கத்தலைவர் நீதிபதி மகாராசன் மறைவு

சென்னை தமிழிசைச் சங்க பழைய தலைவர் T. M. நாராயணசாமி பிள்ளை மறைவுக்கு பின் ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நடுவர் மகாராசன் தலைவராக பணியாற்றி வந்தார். இவர் தமிழ் மொழியிலும், இசையிலும் மிகவும் ஆர்வம், உணர்வு உடையவர். திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்தவர். பத்மா சுப்ரமணியம் பரத நாட்டியக்கலை காஷ்மீரத்திலிருந்து வந்தது என்று ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருந்ததைக் மறுத்து தமிழகக் கலைஞர்கள் சார்பில் தக்க விளக்கங்கள் தந்தவர். இவர் சில காலம் உடல்நலமின்றி இருந்து சென்ற மாதம் காலமானார். வயது 65 இருக்கும் அவருக்கு எங்கள் அஞ்சலி!

## "எங்களுக்கும் காலம் வருமா?"

"சில ஆலயங்களில் வருடத்திற்கு பலமுறை உற்சவங்கள் நடத்தி கலைவிழாக்களும் நடத்துகின்றனர், குறிப்பிட்ட கலைஞர்களுக்கு வருடத்திலேயே இரண்டுமுறை வாய்ப்பு வழங்குகின்றனர். விசாரித்து பார்த்ததில் அப்படி ஒன்றும் பொது மக்களோ, ரசிகர்களோ அவர்களையே மீண்டும் விரும்பி கேட்டதாக தகவல் இல்லை. காரணம் அறிய நான் விரும்பவில்லை. அதற்கு பதில் 'கலைஞருக்கு வருடத்திற்கு ஒருமுறை படும் வாய்ப்பு வழங்கி வேறு நல்ல கலைஞர்களுக்கும்' வாய்ப்பு வழங்க வேண்டுகின்றேன். அப்படி செய்தால் பல கலைஞர்களுக்கும் வாய்ப்பு கிடைக்கும்; ரசிகர்களுக்கும் மகிழ்வு தரும் என நம்புகின்றேன். சம்பந்தப்பட்டவர்கள் கவனித்து ஆவன செய்ய வேண்டுகின்றேன்.

திருப்பரங்குன்றம்
K.T. ஜெயலட்சுமி, சென்னை-92

## இன்ரிக்கோவின் புதிய இசைச்சுருட்டிகள்

இன்ரிக்கோ இசைத்தட்டு நிறுவனம் நாதசுர இசைச்சுருட்டி (கேஸட்) ஒன்றினை வெளியிட்டுள்ளார்கள். இதில் ஆண்டாங்கோவில் செல்வரத்தினம் நாதசுரமும். அரசவைக் கலைஞர் வலங்கைமான் சண்முகசுந்தரம் தவிலும் வாசித்துள்ளார்கள். பைரவி, கேதாரகௌள ராகங்கள் விரிவாக வாசிக்கப்பட்டுள்ளன.

பாம்பன் சுவாமிகளின் பஞ்சாமிர்த வண்ணம், குமாரஸ்தவம் சண்முககவசம் இவற்றையும் தொகுத்து இசைச்சுருட்டியாக வெளியிட்டுள்ளனர். திருப்பூர் சகோதரிகள் S. P. ராமு, S. P. ராதா இவர்கள் R. சுதர்சனம் இசையமைப்பில் அழகாக பாடியுள்ளனர்.

## விநாயகர் சுப்ரபாதம் இசைச்சுருட்டி A.V.M. வெளியீடு

பாடகர் K. வீரமணி குழுவினர் பாடிய விநாயகர் சுப்ரபாத இசைச்சுருட்டியை மயிலை நவசக்தி விநாயகர் ஆலயத்தில் சதுர்த்தியன்று AVM. மியூசிக் சர்வீசு நிறுவனம் வெளியிட்டது. விழாவில் M. குமரன், மதுரை மீனாட்சியம்மன் கோவில் அறங்காவலர் தலைவர் V. N. சிதம்பரம் ஆகியோர் கலந்து கொண்டனர். வீரமணிக்கு தங்க இசைதட்டும் பரிசளிக்கப்பட்டது.

## 'இயலிசை' இனிதாய் வாழ்க !

அசைந்தாடும் மயிலமர்ந்த
அறுமுகன் அருளினாலே
திசையெல்லாம் பரவியுள்ள
தேசங்கள் பலவும் சென்று
வசையில்லா சொற்களாலே
மக்களுக் கின்ப மூட்டி
இசைத்தமிழ் ஓங்கச் செய்தே
"இயலிசை" இனிதாய் வாழ்க!

கவிஞர் எச். கிருஷ்ணமூர்த்தி, சென்னை-4

## இசை மொழிகள்

இசையில் இறைவன் வசிக்கிறான் - இந்தியா
காதலும் இசையும் தவிர மற்றவை
எல்லாம் அழிந்து விடும் - ஸ்காட்லாந்து
இசையுள்ள இடத்தில் கெடுதல்
இராது - ஸ்பெயின்
துக்கமுள்ள மனத்திற்கு சோகமான
இசை இன்பமாயிருக்கும் - இங்கிலாந்து
வேதனை யுள்ள உள்ளத்திற்கு
இசை மருந்து - இலத்தீன்

தொகுப்பு : 'லியோ' இராமலிங்கம், தஞ்சை

இயலிசை இதழினை கிடைக்க கண்டேன்
இதயமும் சிந்தையும் மகிழ்ந்து நின்றேன்
புயலென எழுந்திடும் புதுமை வெள்ளம்
புகழ்ந்திடும் பயிலுவோர் புரட்சி உள்ளம்
மறைந்திடும் கலைமகள் பெருமை யாவும்
மலைமுடி சிகரமாய் சிறக்க செய்யும்
மீனாட்சி சுந்தரம் பெருமை வாழ்க
தானாட்சி பெற்றே தனிப்புகழ் 'அடைக

இளங்கவி A. அசேன், குன்றத்தூர்


அகிலமெல்லாம் மகிழவைக்க
வி ஜி பி யின் புதிய முயற்சி
வி ஜி பி வீடியோ விஷன்

★ இந்திய நாட்டின் சிறப்புக் கலாச்சாரம் சினிமா, நாடகம், நடனம், இசை, சிற்பக் கலைகள், விளையாட்டுகள், பாலர் சினிமா ஆகியவைகள்.

★ உலகின் சிறந்த நவீன எலக்ட்ரானிக் இயந்திரங்கள் மூலம் பிரசித்தி பெற்ற விஜிபி வீடியோ கேசட்டுகளால், உலகமெங்கும் மகிழ்விக்கப்படுகிறது.

வி ஜி பி
வீடியோ
விஷன்
ஆஃப்
இந்தியா

விஜிபி வீடியோ விஷன்
ஆஃப் இந்தியா,
யூனிட் நெ. 51,
2-எஸ்.டி.எஃப், பில்டிங்,
சாந்தாகுரூஸ் எலக்ட்ரானிக்
எக்ஸ்போர்ட்
பிராசெஸிங் ஜோன்,
அந்தேரி ஈஸ்ட்;
பம்பாய்-400096.

வெளிநாட்டு ஏற்றுமதி வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றது.

# தமிழிசை மறுமலர்ச்சி

## 'பேரறிஞர் அண்ணு'



சில ஆண்டுகளுக்கு முன் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பல மாநாடுகள் நடைபெற்றன. தமிழ்நாட்டில் உள்ள புகழ்பெற்ற இசைவாணர்கள், இசைக்கலை அன்பர்கள் அனைவரும் அங்கு கூடினர். நான்கு நாட்கள் தமிழிசையைப் பற்றி பலர் பேசினா. அம்மகா நாட்டில் ஒரு சிறந்த முடிவும் செய்யப்பட்டது.

'சங்கீதம் பள்ளிக்கூடங்களில், தமிழ்ப பாட்டுகளையே சொல்லி கொடுக்க வேணடும்; சபைகளில் தமிழ்ப் பாட்டுகளையே பாடவேண்டும்' என்று அம்மகாநாட்டினர் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி வைத்தனர்.

இத்தீர்மானத்தை எல்லா இசைக் கலைவாணர்களும் ஒப்புக்கொண்டனர். நமது நாட்டுப் பத்திரிகைகள் பலவும், இசைத்தமிழ் வளர்ச்சிக்கு வந்திருக்கும் நல்ல காலத்தைப் பற்றி நாவாரப் புகழ்ந்தன. தமிழ் கலை வளர்ச்சியிற் கருத்துடையவர்கள் அனைவரும் உள்ளங் குளிர்ந்தனர். இத்தகைய மகாநாட்டுக்குக் காரணமாக இருக்கும் அண்ணுமலைப் பல்கலைக் கழக நிறுவனர் செட்டி நாட்டு அரசர் சர் அண்ணுமலை செட்டியாரவர்களைப் பாராட்டினர். அவருடைய அரும்பெரும் முயற்சிக்கு வாழ்த்து கூறினர்.

தமிழில் இசைப் பாடல்கள் உயற்றியதற்குச் பரிசளிப்பதற்காகவும், அவற்றைப் பாடுவோரைப் பாராட்டுவதற்காகவும் செட்டி நாட்டு அரசர் அவர்கள் பெருந்தொகையை நன்கொடையாக அளித்துள்ளார். இச் சிறந்த வேலையைத் தனது செல்வப் பிள்ளையாகிய அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் மூலமே செய்வதற்கு முன் வந்தார்.

தமிழ் மொழியே, இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்று முப்பிரிவை உடையது. இவற்றுள் இசையென்பது இயற்றமிழிலும் உண்டு: நாடகத் தமிழிலும் உண்டு. தமிழே இசையுருவாக அமைந்தது. இசையே தமிழில்தான் முதன் முதலில் தோன்றியதென்பது பல தமிழாராய்ச்சியாளர்களின் முடிவு. தமிழாராய்ச்சியுடைய, இசைவாணர்களுடைய முடிவும் இதுதான். இத்தகைய இசைத்தமிழ் இடைக்காலத்தில் குன்றிவிட்டது. இசைவாணர்கள் பலர் தமிழ்ப் பாடல்கள் பாடுவதே அவமானமெனக் கருதியிருந்தனர். பொருள் விளங்காத பாடல்களைப் பாடி வந்தனர்.

ஆனால் பல ஆண்டுகளாகப் பல தமிழன்பர்கள் இசைத்தமிழ் வளர்ச்சியடைய வேண்டுமெனக் கூறிவந்தனர். ஒவ்வொரு சங்கீத மாநாடுகளிலும் இதுபற்றிப் பேசப்பட்டது. இம்முயற்சி காரணமாக இசைவாணர்கள் பலரும் சபைகளில் தமிழ்ப் பாடல்கள் பாடவும் தொடங்கினர். அப்பாடல்களை இசைக் காதலர்கள் சுவைக்கவும் தொடங்கினர், தமிழ்ப் பாடல்களைத் தமிழ் மக்கள் சுவைக்கின்றனர் என்பதை அறிந்தவுடன், இசைவாணர்களுக்கும் தமிழ்ச் 'சாகித்யம்' பாடுவதில் ஊக்கம் வளர்ந்து வந்தது.

ஆனால் ஒரு சிலர், அண்ணுமலைநகரில் செய்யப்பட்டிருக்கும் அருமையான முடிவைக் குறைகூறத் தொடங்கியிருக்கின்றனர். அவர்கள் தமிழிலேயே இசைபாடுவது என்று தொடங்கினுல் கர்நாடக சங்கீதம் அழிந்துபோய்விடும்; தியாகராஜ கீர்த்தனங்கள் மறைந்துபோய்விடும்; தமிழில் கர்நாடக சங்கீதத்தை அமைக்க முடியாது; என்னும் வாதத்துக்கு நம் மாகாணப் பத்திரிக்கையாகிய இந்துவும் ஆதரவளித்து வருகின்றது.

கர்நாடக சங்கீதம் ஒருநாளும் அழியாது. கர்நாடக சங்கீதத்தை அமைத்து பாடக்கூடிய பாடல்கள் தமிழில் ஏராளமாக இயற்றிக்கொள்ளலாம், இதற்கு செட்டிநாட்டு அரசரின் நன்கொடை பேருதவி செய்யும், தமிழ் நாட்டில் பண்டுதொட்டு நிலவி வரும் சங்கீதம் கர்நாடக சங்கீதமாகும். ஆகையால் தமிழ்ப் பாடல்கள் பாடுவதால் கர்நாடக சங்கீதம் அழிந்துவிடும் என்பது தமிழரின் தன்மையை அறியாதவர் கூற்று. தியாகராஜ கீர்த்தனைகள் மறைந்துவிடுமென்று கூறுவதும் தவறு. அவற்றையும் இசைவாணர்கள் பாடிக் கொண்டு தான் இருப்பார்கள். ஆதலால் கர்நாடக சங்கீதம் போய்விடும்; தியாகராஜ கீர்த்தனைகள் மறைந்துவிடும் என்று காரணம் கூறி தமிழிசையை வளர்க்கும் முயற்சிக்கு தடை செய்வது சிறிதும் அறிவுக்குப் பொருந்தாத செயலேயாகும்.

தோழியர் கே. பி. சுந்தராம்பாளின் இசைக்குத்தமிழ தமது செவியையும் சிந்தனையையும் பரிசாக அளித்ததன் காரணமும் இதுவே 'செந்தூர் வேலவா' என்று பொருள் விளங்கப்பாடும்பொழுது, சின்ன விஷயமாகப் பாடப்படுகின்றது என்று புரிந்துகொண்டு பூரிக்கின்றனர்.

இசை விருந்தை இன்று அளித்துக்கொண்டுவரும் தோழியர் எம், எஸ். சுப்புலட்சுமி தியாகராஜர் கீர்ததனங்களைப் பல வருடப் பாடப பழக்கத்துடன் பாடிகொண்டிருந்தபோது, வித்துவான்களுக்கு அறிமுகமாகி இருந்தாரேயொழிய நாட்டு மக்களுக்கு அறிமுகமாகவில்லை ஏன்? நாட்டினர் எம்.எஸ்.எஸ். பாடுவது பிரமாதமான வித்தை அடங்கிய பாட்டு என்று கேள்விப்பட்டார்களேயொழிய அதன் சுவையை அனுபவிக்க முடியவில்லை. ஆனுல் எம்.எஸ், எஸ். 'மனங்குளிர' என்ற செந்தமிழ் இசையைப் பாடியதும், தமிழரின் மனமெல்லாம் குளிர்ந்தது இசை நம்மை இழுத்து சகுந்தலை கண்ட சோலை, காலை, பசுமான், கன்று, குயில், மயில ஆகியவற்றை நமது மனக்கண முன் நிற்கும்படி செய்தது இசை இன்பத்தை மக்கள் முழுவதும் அடைய முடிந்தது.

தமிழ் இசைக்கு ஆதரவு இருக்குமா என்று கேட்கும் பேர்வழிகள் – இசையரசு தண்டபாணி தேசிகரின் தமிழ இசை மக்களை எவ்வளவு உருக்குகிறது; பொருள் விளங்க, உணர்ச்சி ததும்ப அவர் நமது தமிழில் நம்மிடம் பாடுவதால் மக்கள் உருகுவது இருக்கட்டும்; தேசிகரே உருகுவதைக் காணலாம்.தமிழ் இசை பாடும்போது!

மதுரை மாரியப்ப சுவாமிகள் சிதம்பரம் ஜெயராமன், திருவாரூர் நமச்சிவாயம் ஆகிய இசை மணிகளின் ஒலி, நமது தமிழாக இருப்பதால் நமது நெஞ்சை அள்ளுவதைக் கூற வேண்டுமா?

[அறிஞர் அண்ணு பிறந்தநாள் செப்டம்பர் 15, இதனையொட்டி அவர் 30 வருடங்களுக்குமுன் எழுதிய 'தமிழரின் மறுமலர்ச்சி' என்ற நூலின் சில பகுதிகளை இன்றைய இசைத்தலை முறை தகவலுக்காக பிரசுத்துள்ளோம்.]

## செலவன் K. ஸ்ரீராமன் மிருதங்க அரங்கேற்றம்

இராமனுதபுரம் M. N. கந்தசாமி அவர்களின் மாணவன் மிருதங்க அரங்கேற்றம் மயிலை தியாகராஜ வித்வத்சமாஜத்தில் நடந்தது செங்கல்பட்டு ரங்கநாதன் பாட்டுக்கும், கோவை B. தட்சிணுமூர்த்தி வயலினுக்கும் குருவும், மாணவரும் சேர்ந்து மிருதங்கம் வாசித்தனர்கள். பல இசைக் கலைஞர்கள், மிருதங்கக் கலைஞர்கள், ரசிகர்கள் வந்து குருவையும் மாணவரையும் பாராட்டினர். M. N. கந்தசாமி அவர்கள் மறைந்த மிருதங்க மேதை பழநி சுப்புடு மருமகன் என்பது இசையுலகம் அறிந்தே.

## நடன ஆசிரியை தேவை

திருவண்ணுமலை நர்சரி பள்ளி கூடத்தில் நடைபெறும் நடன வகுப்புக்கு நடன ஆசிரியை தேவை. விபரங்களுக்கு :

அரு. கலைநம்பி, செயலர், வள்ளலார் மாழலையர் பள்ளி,
வேட்டவலம் சாலை, திருவண்ணுமலை N' A.

# இரத்தினகிரி சித்தர்

ரத்தின மலைமீதோர்
சித்தனை உருவாக்கி
இத்தரை மகிழ்விக்கிருய் — முருகா
தத்துவம் விளைவிக்கிருய்

சத்தியம் மலர்தூவ
வித்தகம் ஒளிவீச
பத்திமை அறிவிக்கிருய் — முருகா
எத்தனை எழில்பூக்கிருய் — ரத்தின

மயில்களின் அழகோடு
குயில்களின் குரலோடு
இயலிசைத் தமிழ்கேட்குதே — முருகா
இனிமைகள் விளையாடுதே
— ரத்தின

குன்றுகள் முடியாவும்
கூடங்கள் பலவாகி
மன்றங்கள் உருவானதே — நாளும்
மறைகளின் இசைகேட்குதே
— ரத்தின

வெண்கல மணியோசை
மங்கல ஒலிகூட்டி
எங்களை வரவேற்குதே — ஓமெனும்
மந்திரம் களிப்பூட்டுதே
— ரத்தின



வலசை ப, கணேசன், ஆற்காடு

TN/MS(s)/260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras-26 Published and Edited by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, Madras-600 024

## சொர்ணத்தை வழங்கிய சொர்ணமுகி

### வெளிநாடுகள் பயணம்



தமிழக அரசு நடனக் கலைஞர் சொர்ணமுகி இலங்கையிலுள்ள தமிழ் தலைநகர் யாழ்ப்பாணம் நூலக உதவி நிதி நிகழ்ச்சிகளை சமீபத்தில் கொழும்பு யாழ்ப்பாணம், வவுனியா முதலிய இடங்களில் நடத்தினர். இந்நிகழ்ச்சிகள் மூலம் நூலகத்திற்கு ரூ. 30 லட்சம் நிதி திரண்டது. மீண்டும் நவம்பரில் இலங்கை சென்று சுவர்ணமுகி நிகழ்ச்சிகள் நடத்த உள்ளார்.

தற்போது இங்கிலாந்து, பிரான்சு, முதலிய நாடுகள் சென்று நடனம் ஆட அவரது சகோதரிகள் நடிகை உஷா, தேவிகாராணி இவர்களுடன் சென்றுள்ளார்.

## ராசி நல்ல ராசி

இயலிசையில் குறிப்புகள் செய்திகள் இவற்றில் வந்த சிலருக்கு விரைவிலேயே முன்னேற்றமான நிகழ்ச்சிகள் செய்திகள் வந்துள்ளன. சில உதாரணங்கள் :—

- முதல் இதழில் சென்னை வானொலி விவிதபாரதியின் இயக்குநர் E. கோவிந்தராஜுலு அவர்களைப் பாராட்டி குறிப்பு வந்தது விரைவில் அவர் சென்னை தலைமை வானொலி நிலைய இயக்குநராகப் பொறுப் பேற்று திறம்பட செயல் பட்டு வருகின்றார்.
- சேலத்தில் வீணை S. பாலச்சந்தருக்கு பட்டம் வழங்கிய செய்தி 2வது இதழில் வெளி வந்தது. விரைவிலேயே அவருக்கு சென்னை இசைவிழா பருவத்தில் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் இசை விழாவிற்கு தலைமை தாங்கி விருது பெறும் அறிவிப்பு வந்தது.
- அதே இதழில் சிவாஜிராசா, ஓர் படத்தில் இசையமைப்பாளராக அறிமுகமானதை எழுதினோம். அடுத்த இதழ் வெளிவரும் முன் அவரது படம் காற்றுக் கென்ன வேலி வெளிவந்து அவருக்கு நல்ல பெயர் கொடுத்து இன்று பல படங்களுக்கு இசையமைக்கின்றார்.
- அதே இதழிலும் சென்ற இதழிலும் இயக்குநர் T. இராஜேந்தர் திறமைகளை, பாராட்டி எழுதினோம் சென்ற மாதம் அவர் நடிகை உஷாவை புரட்சி திருமணம் செய்து கொண்டு தனது கவலைகளை மறந்து இனிதான இல்லற பயணம் தொடங்கியுள்ளார்.
- சென்ற இதழில் திருக்குறளார் V. முனுசாமி அவர்களின் வாழ்த்து வெளியிட்டோம். அவருக்கு திரு. வி- க. நூற்றாண்டு நினைவுப்பரிசு ரூ. 10,000 தமிழக அரசு வழங்கியுள்ளது.
- சீர்காழி கோவிந்தராசன் அவரது ஊரில் பட்டம் பெற்றதனை சென்ற இதழில் வெளியிட்டோம். இவ்விதழ் தலைப்பு செய்தியில் மற்ற விவரம் நீங்கள் காணலாம்.
- சென்ற இதழில் பாடலாசிரியர் முல்லை மணிக்கு தூத்துகுடியில் கவிஞர் பட்டம் வழங்கியதை த்தெரிவித்தோம், அவர் தற்பொழுது ஒருபடததிறகு வசனம், பாடல் எழுத ஒப்பந்தமாகி உள்ளார்.
- எனவே இயலிசை இதழுக்குப் நல்ல ராசி இருக்கின்றது!

## சரசுவதி ஸ்டோர்சின் சலுகை விற்பனை வாரம்

கடந்த மாதம் சென்னையிலுள்ள இசைத்தட்டு பழைய நிறுவனம் (A V M மியூசிக் சர்விசு) சிறிய இசைத்தட்டு கண்காட்சியே நடத்தி சலுகை விலையில் இசைத்தட்டு, இசைச் சுட்டி விற்பனை செய்தனர். நல்ல விற்பனை அவர்களுக்கு தேங்கிய இசைத்தட்டு, சுட்டிகளை விற்க முடிந்தது. வாங்குபவர்களுக்கு வெளியில் இராத சில இசைத்தட்டுகளையும், சுட்டிகளையும் மலிவாக வாங்க நல்ல வாய்ப்பு, குறிப்பாக பதிவு செய்த இசைச்சுட்டி ரூ 20 /- தான் அந்த இடத்தில் தான். அதிகக் கூட்டம். இதைப் போல் மற்ற இசைத்தட்டு நிறுவனங்களும் செய்யலாம்.

## நாடெங்கும் நவராத்திரி விழா

### கலைநிகழ்ச்சிகள் ஏற்பாடு

இவ்வருடம் நவராத்திரி விழா வரும் அக்டோபர் 18 முதல் 27 வரை நடைபெற உள்ளது. நவராத்திரி விழாவினை பல திருக்கோவில்களிலும் சபைகளிலும் கலைநிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்து சிறப்பாக கொண்டாட உள்ளனர். சில இடங்களில் ஒரே நாளில் இரண்டு மூன்று நிகழ்ச்சிகளும் உண்டு. நமது தமிழக கலைஞர்களுக்கு ஏக கிராக்கி!

சென்னையில் அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோவில், அருள்மிகு ஏகாம்பரசுவரர் திருககோவில், புரசை பாதாள பொன்னியம்மன் திருக்கோவில், பவளக்காரத்தெரு, நகரத்தார் சங்கம், மாங்காடு காமாட்சியம்மன் திருக்கோவில் இவற்றில் நடைபெறும் கலை நிகழ்ச்சிகளில் பெருங்கலைஞர்கள் கலந்து கொள்ளுகின்றனர்.

தவிர தமிழகத்தில் சிறப்பாக நவராத்திரி கலைவிழாக்கள் நடைபெறும் இடங்கள் ;—

காஞ்சிபுரம் அருள்மிகு ஏகாம்பரேசுவரர் திருக்கோவில்
மதுரை அருள்மிகு மீனாட்சியம்மன் ....
மதுரை மீனாட்சியம்மன கூடழலகர் ...
இராமேசுவரம் அருள்மிகு இராமநாத சுவாமி ...
சங்கரன் கோயில் அருள்மிகு கோமதியம்மன் ...
திருவானைக்காவல் அருள்மிகு அகிலாண்டேசுவரி...
இராமநாதபுரம் அரசர் மாளிகை
வேலூர் கோட்டைக் கோயில்
குலசேகரன் பட்டிணம் அருள்மிகு முத்தாரம்மன் திருக்கோயில்
சேலம், கோயம்புத்தூரில் சில ஆலயங்கள்



## 'பக்கத்துவீட்டு ரோஜா'

### பாட்டைக் கேட்கலாம்

கலைஞானம் தயாரித்துள்ள பக்கத்துக்குவீட்டு ரோஜாவின் அழைப்பு வந்து ஆசிரியர் படம் பார்த்தார். டைரக்ஷன், நடிகர்கள் நடிப்பு படம் பிடிப்பு அனைத்தும் நன்றாக உள்ளன. கதைதான் சம்பந்தமில்லாமல் - இயற்கையாக இல்லை. நல்ல இசையமைப்பு - சங்கர் - கணேஷ்தான் படத்தை ஓட்டுகின்றனர். 'புதுவித சுகம்' பாட்டு புதுவித சுகம்தான் 'தண்ணி இல்லேனு' ரசிகர்களைக் கவர்கின்றது வழக்கப்படி கார்த்திக்-ராதா ஜோடியில் கிளுகிளுப்பூட்டும் காதல், பிரமாதமாக சண்டை போடுகின்றாரே கார்த்திக்! தேறிவிடுவார்.

## கல்கத்தா பைன் ஆர்ட்ஸ் 4-வது ஆண்டு விழா

### தமிழகக்கலைஞர்கள் நிகழ்ச்சிகள்

கல்கத்தா தியாகராஜ ஹாலில் செப்டம்பர் 4 முதல் 6 வரை சிறப்பாக கல்கத்தா பைன் ஆர்ட்ஸ் 4 வது ஆண்டு விழா நடைபெற்றது. முதல் நாள் N. ரமணி புல்லாங்குழல் கச்சேரிக்கு குமாரி மீரா நராயணன் வயலினும், உமையாள்புரம் K. சிவராமன் மிருதங்கமும் வாசித்தனர், கச்சேரிகளை கட்டியது.

இரண்டாவது நாள் K. V. நாராயணசாமி, M. சந்திரசேகரன், வயலின்- உமையாள்புரம் மிருதங்கததுடன் கச்சிதமாக கச்சேரி செய்தார். கடைசி நாள் மதுரை T. N. சேஷகோபாலன் M. சந்திரசேகரன் வயலின்- இராமபத்ரன் மிருதங்கத்துடன் நீண்டநேரம் பாடி அனைவரையும் மகிழ்வித்தார்.

நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் ஏராள ரசிகர்கள் வந்து கல்கத்தாவில் கர்நாடக இசைக்கு உள்ள வரவேற்பினைக் காட்டினர். கலைஞர்கள் ரசிகர்கள் அனைவருக்கும் செயலாளர் T S. சீனுவாசன் நன்றி தெரிவித்தார். சென்னையிலும் கல்கத்தா பைன் ஆர்ட்ஸ் மயிலை சாஸ்திரி ஹாலில் வரும் அக்டோபர் 25 முதல் 28 தேதி வரை கச்சேரிகள் ஏற்பாடு செய்துள்ளனர். நுழைவுக் கட்டணம் கிடையாது.

## இசையமைப்பாளர் தேவராஜா மறைவு

தெலுங்குபட உலக பிரபல இசையமைப்பாளர் தேவராஜா திடீரென்று மரணம் அடைந்தார். அவர் பல தெலுங்கு படங்களுக்கு இசையமைத்தவர். தமிழில் 'கோடுகள் இல்லாத கோலங்கள்' என்ற படத்திற்கும் இசையமைத்துள்ளார் இவரது குடும்பம் வசதியான நிலையில் இல்லை. எனவே இசையமைப்பாளர்கள் சங்கத் தலைவர் A. A. ராஜ் நிதி திரட்டி தேவராஜா குடும்பத்திற்கு வழங்க உள்ளார்.